# श्री भ्रमराम्बाष्टकम्

## ஸ்ரீ ப்ரமராம்பாஷ்டகம்

(1)

चाञ्चल्यारुणलोचनाञ्चितकृपां चन्द्रार्धचूडामणिं
चारुस्मेरमुखां चराचरजगत्संरक्षिणीं तत्पदाम् ।
चञ्चच्चम्पकनासिकाग्रविलसन्मुक्तामणीरञ्जितां
श्रीशैलस्थलवासिनीं भगवतीं श्रीमातरं भावये ॥

சாஞ்சல்யாருணலோசனாஞ்சிதக்ருபாம்
சந்த்ரார்த சூடாமணிம்
சாருஸ்மேரமுகீம் சராசர ஜகத்
ஸம்ரக்ஷணீம் தத்பதாம்।
சஞ்சத் சம்பக நாஸிகாக்ர விலஸத்
முக்தாமணீ ரஞ்ஜிதாம்
ஸ்ரீ சைலஸ்தல வாஸினீம் பகவதீம்
ஸ்ரீ மாதரம் பாவயே ॥

செவ்வரி கண்களில் தேங்கும் கருணையுடையவளும், பிறைச்சந்திரனை தலையில் அணிந்தவளும், புன்முறுவல் பூத்த முகத்தையுடையவளும், உலகமனைத்தையும் தன்னில் தாங்கி ரக்ஷிப்பவளும், ஒளிரும் சம்பகப்பூ போன்ற மூக்கு நுனியில் விளங்கும் முத்துமணியால் அழகியவளும், ஸ்ரீசைலத் தலத்தில் உறைபவளுமான தாயை தியானிக்கிறேன்.

(2)

कस्तूरीतिलकाञ्चितेन्दुविलसत्प्रोद्भासिफालस्थलीं
कर्पूरद्रवमिश्रचूर्णखदिरामोदोल्लसद्वीटिकाम् ।
लोलापाङ्गतरङ्गितैरतिकृपासारैर्नतानन्दिनीं
श्रीशैलस्थलवासिनीं भगवतीं श्रीमातरं भावये ॥

கஸ்தூரீ திலகாஞ்சிதேந்து விலஸத்
ப்ரோத்பாஸிபாலஸ்தலீம்
கர்பூரத்ரவ மிச்ர சூர்ணகதிரா
மோதோல்லஸத்வீடிகாம்।
லோலா பாங்கதரங்கிதை ரதிக்ருபா
ஸாரை: நதானந்தினீம்
ஸ்ரீசைலஸ்தல வாஸினீம் பகவதீம்
ஸ்ரீமாதரம்பாவயே॥

ஸ்ரீசைலத்தில் குடிகொண்ட ப்ரமராம்பிகையை தியானிக்கிறேன். அந்த தாயின் நெற்றியில் கஸ்தூரி திலகமும், சந்திரப் பிறையும் மிளிர்கின்றன. (வாயில்) கற்பூரக் குழம்பும் கதிரப் பொடியும் கலந்து மணக்கும் தாம்பூலச் சுருள் அடக்கியுள்ளாள். சஞ்சலமான கடைக்கண்களில் அலைமோதும் க்ருபாப்ரவாஹத்தால் வணங்கியவரை மகிழ்விக்கின்றாள் அவள்.

(3)

राजन्मत्तमरालमन्दगमनां राजीवपत्रेक्षणां
राजीवप्रभवादिदेवमकुटै राजत्पदाम्भोरुहाम् ।
राजीवायतपत्रमण्डितकुचां राजाधिराजेश्वरीं
श्रीशैलस्थलवासिनीं भगवतीं श्रीमातरं भावये ॥

ராஜன்மத்த மராளமந்தகமனாம்
ராஜீவபத்ரேக்ஷணாம்
ராஜீவப்ரபவாதிதேவமகுடை:
ராஜத்பதாம்போருஹாம்।
ராஜீவாயத பத்ரமண்டிதகுசாம்
ராஜாதிராஜேச்வரீம்
ஸ்ரீசைல ஸ்தலவாஸினீம் பகவதீம்
ஸ்ரீமாதரம் பாவயே॥

அழகிய அன்னப்பறவை போன்று மெல்ல செல்பவளாயும், தாமரை இதழ் போன்ற கண்களையுடையவளும், பிரம்ம தேவன் முதலிய தேவர்கள் விழுந்து வணங்கப்படுபவளும், பரந்த தாமரை இதழ்கள் படிந்து விளங்கும் மார்பகங்களையுடையவளும், ராஜராஜேச்வரியாயு மிருக்கிற ஸ்ரீசைலவாஸினியான தாயை தியானிக்கிறேன்.

(4)

षट्तारागणदीपिकां शिवसतीं षड्वैरिवर्गापहां
षट्चक्रान्तरसंस्थितां वरसुधां षड्योगिनीवेष्टिताम् ।
षड्चक्राञ्चितपादुकाञ्चितपदां षड्भावगां षोडशीं
श्रीशैलस्थलवासिनीं भगवतीं श्रीमातरं भावये ॥

ஷட்தாராங்கண தீபிகாம்
சிவஸதீம் ஷட்வைரிவர்காபஹாம்
ஷட்சக்ராந்தர ஸம்ஸ்திதாம் வரஸுதாம்
ஷட்யோகினீ வேஷ்டிதாம்।
ஷட்சக்ராஞ்சித பாதுகாஞ்சிதபதாம்
ஷட்பாவகாம் ஷோடசீம்
ஸ்ரீசைல ஸ்தலவாஸினீம் பகவதீம்
ஸ்ரீமாதரம் பாவயே॥

ஸ்ரீசைலத்தில் வீற்றிருக்கும் ப்ரமராம்பிகையை தியானிக்கிறேன். அந்த அன்னை ஆறுகோணங்களின் நடுவில் ஆறு யோகினிகளால் சூழப்பட்டு அம்ருதமாயிருக்கிறாள். ஆறுசக்ராகார பாதுகையுடையவள், ஆறுபாவங்களாயும், பதினாறு (ஷோடசி) அக்ஷரங்கள் உடைவளாயுமிருக்கிறாள்.

(5)

श्रीनाथादृतपालितत्रिभुवनां श्रीचक्रसंचारिणीं
गानासक्तमनोजयौवनलसद्गन्धर्वकन्यादृताम् ।
दीनानामतिवेलभाग्यजननीं दिव्याम्बरालंकृतां
श्रीशैलस्थलवासिनीं भगवतीं श्रीमातरं भावये ॥

ஸ்ரீநாதாத்ருதபாலிதத்ரிபுவனாம்
ஸ்ரீசக்ரஸஞ்சாரிணீம்
கானாஸக்த மனோஜயௌவனலஸத்
கந்தர்வகன்யாத்ருதாம்।

தீனானாமதிவேலபாக்ய ஜனனீம்
திவ்யாம்பராலங்க்ருதாம்
ஸ்ரீசைலஸ்தலவாஸினீம் பகவதீம்
ஸ்ரீமாதரம் பாவயே॥

ஸ்ரீநாதரால் ஆதரிக்கப்பட்டு மூவுலகையும் காப்பவள் ஸ்ரீசக்ரத்தில் உலாவருபவள்; பாடத்தொடங்கிய இளம் கந்தர்வ கன்னிகைகள் பாராட்டும் பெற்றவள், ஏழை எளியவருக்கும் மிகப்பெரிய அதிர்ஷ்ட வாய்ப்புகளை நல்குபவள், திவ்யமான ஆடையணிந்தவள் - ஆகிய ஸ்ரீசைலத்தலத்தில் அமர்ந்த ஸ்ரீ மாதாவை தியானிக்கிறேன்.

(6)

लावण्याधिकभूषिताङ्गलतिकां लाक्षालसद्रागिणीं
सेवायातसमस्तदेववनितासीमन्तभूषान्विताम् ।
भावोल्लासवशीकृतप्रियतमां भण्डासुरच्छेदिनीं
श्रीशैलस्थलवासिनीं भगवतीं श्रीमातरं भावये ॥

லாவண்யாதிகபூஷிதாங்கலதிகாம்
லாக்ஷாலஸத்ராகிணீம்
ஸேவாயாத ஸமஸ்ததேவ
வனிதாஸீமந்தபூஷான்விதாம்।
பாவோல்லாஸ வசீக்ருத ப்ரியதமாம்
பண்டாஸுரச் சேதிநீம்
ஸ்ரீசைலஸ்தலவாஸினீம் பகவதீம்
ஸ்ரீமாதரம் பாவயே॥

அழகிற்கு அதிகமாக அலங்கரிக்கப்பட்டவள், லாக்ஷா ரஸம் தானோவென்று விளங்கும் செந்நிறங்கொண்டவள், சேவிக் கவந்த தேவ மங்கயைர் தலைவகிடுதானேயாகிய ஆபரணம் கொண்டவள், பாவநயத்தால் பர்த்தாவான பரமேச்வரனை தன்வசப்படுத்தியவள், பண்டாசுரனைத் தொலைத்தவள் ஆகிய ஸ்ரீசைலவாஸினியான ஸ்ரீமாதாவை தியாநிக்கிறேன்.

(7)

धन्यां सोमविभावनीयचरितां धाराधरश्यामलां
मुन्याराधनमोदिनीं सुमनसां मुक्तिप्रदानव्रताम् ।
कन्यापूजनसुप्रसन्नहृदयां काञ्चीलसन्मध्यमां
श्रीशैलस्थलवासिनीं भगवतीं श्रीमातरं भावये ॥

தன்யாம் ஸோமவிபாவநீயசரிதாம்
தாராதரச்யாமலாம்
முன்யாராதன மோதினீம் ஸுமனஸாம்
முக்திப்ரதான வ்ரதாம்।
கன்யாபூஜன ஸுப்ரஸன்னஹ்ருதயாம்
காஞ்சீலஸன் மத்யமாம்
ஸ்ரீசைலஸ்தல வாஸினீம் பகவதீம்
ஸ்ரீமாதரம் பாவயே॥

மிகப் புண்யம் வாய்ந்தவள்; சந்திரனால் விளக்கம் பெறும் சரிதம் கொண்டவள், மேகம் போல கருமேனியுள்ளவள், முனிவர் பூஜிப்பதில் மகிழ்ந்தவள், ஒட்டியாணம் மிளிரும் இடைப்பாகம் கொண்டவள், கன்யகைகளை பூஜிப்பதில் மகிழ்ச்சிபெறுபவள் -- ஆகிய ஸ்ரீசைல வாஸியான ஸ்ரீமாதாவை தியானிக்கிறேன்.

(8)

कर्पूरागरुकुंकुमांकितकुचां कर्पूरवर्णस्थितां
कृष्टोत्कृष्टसुकृष्टकर्मदहनां कामेश्वरीं कामिनीम् ।
कामाक्षीं करुणारसार्द्रहृदयां कल्पान्तरस्थायिनीं
श्रीशैलस्थलवासिनीं भगवतीं श्रीमातरं भावये ॥

கர்பூராகருகுங்குமாங்கிதகுசாம்
கர்பூர்வர்ணஸ்திதாம்
க்ருஷ்டோத்க்ருஷ்டஸுக்ருஷ்ட கர்மதஹனாம்
காமேச்வரீம் காமினீம்।
காமாக்ஷீம் கருணாரஸார்த்ரஹ்ருதயாம்
கல்பாந்தரஸ்தாயினீம்
ஸ்ரீசைலஸ்தலவாஸினீம் பகவதீம்
ஸ்ரீமாதரம் பாவயே॥

பச்சை கர்பூரம், அகில் சந்தனம் பூசிய மார்பகங்களுடையவள், கர்பூர நிறத்தில் நிற்பவள், எவ்வளவோ உயரிய தாயினும் கர்மாக்களைப் பொசுக்குபவள்; அவள் காமேச்

வரியும், காமினியுமாவாள். கருணைச்சுரக்கும் ஹ்ருதயமுள்ள காமாக்ஷியன்னை யுக யுகாந்தரங்களிலுமிருப்பவள் - ஆகிய ஸ்ரீ சைலத்தலத்தில் வாழும் ஸ்ரீமாதாவை தியானிக்கிறேன்.

(9)

गायत्रीं गरुडध्वजां गगनगां गान्धर्वगानप्रियां
गम्भीरां गजगामिनीं गिरिसुतां गन्धाक्षतालंकृताम् ।
गङ्गागौतमगर्गसंनुतपदां गां गौतमीं गोमतीं
श्रीशैलस्थलवासिनीं भगवतीं श्रीमातरं भावये ॥

காயத்ரீம் கருடத்வஜாம் ககனாகாம்
காந்தர்வகானப்பிரயாம்
கம்பீராம் கஜகாமினீம் கிரிஸுதாம்
கந்தாக்ஷதாலங்க்ருதாம்।
கங்காகௌதம கர்கஸந்நுதபதாம்
காம் கௌதமீம் கோமதீம்
ஸ்ரீசைலஸ்தலவாஸினீம் பகவதீம்
ஸ்ரீமாதரம் பாவயே॥

கானம் செய்பவரைக்காப்பாற்றும் காயத்ரியானவள் அவள். கருடத்வஜத்துடன் ஆகாயத்தில் செல்லுபவள், கந்தர்வர்கள் பாடும் பாட்டில் ஈடுபாடுள்ளவள்; கம்பீரமாக யானைபோல் நடையுள்ளவள், ஹிமயமலையின் மகளான அவள் சந்தனம், அக்ஷதை இவற்றால் பூஜிக்கப்படுபவள். கங்கை கௌதமர், கர்கர் முதலியோரால் போற்றப்பட்டவள். கௌதமி, கோமதி, கோவாயும், உள்ள ஸ்ரீசைலத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீமாதாவை தியானிக்கிறேன்.

*ப்ரமராம்பாஷ்டகம் முற்றிற்று*

